17

# ஜீவரேகை

முந்தா நாள். அல்லது நேற்று. அல்லது எப்போதோ. நேரம் என்பதற்கு அர்த்தமில்லை. இப்போது. பாட்டனி புரொஃபஸருக்காக காத்திருக்கும் வேளையில் ராதா அவளது கையைப் பிடித்து இழுத்தாள். என்ன ஏது என்று விசாரிப்பதற்குள் அவளது கையைப் பிரித்தாள். தன் கையில் இருந்த பால்பாயின்ட் பேனாவை லாவகத்துடன் இடது உள்ளங்கை ரேகைகளின் மேல் ஓட்டியபடி 'வெரி இன்ட்ரெஸ்டிங்' என்றாள்.

''என்ன இன்ட்ரெஸ்டிங்?''

''நீ ரொம்ப காலம் வாழ்வே. அம்மாடி, உன் ஜீவரேகையைப் பாரு. நீள, முடிவே இல்லாம. உனக்கு சாவு இல்லாம கூட இருக்கலாம்.''

அவள் விருக்கென்று கையையிழுத்துக் கொண்டாள்.

''அதைத் தவிர வேற ஒண்ணும் சொல்லும்படியா இல்லையா?''

ராதா சிரித்தாள்.

''அதுதான் தீர்க்கமா இருக்கு. காட்டு கையை. கல்யாணம் கார்த்தி உண்டா, குழந்தைகள் எத்தனைனு சொல்லிடறேன்.''

''நீ சிரமப்பட வேண்டியதில்லே. அது என்னுடைய தீர்மானம். ஆயுசுக்கு வேணா நா பொறுப்பில்லே.''

''காட்டேன், பார்த்துடறேன்.''

அவள் கையைநீட்டும் போது புரொஃபஸர் வந்துவிட்டதால், கல்யாணம் கார்த்தி உண்டா குழந்தைகள் உண்டா என்று தெரிந்துகொள்ள முடியாமல் போயிற்று. விநாடி நேரத்தை வீணாக்காதவர் பாட்டனி புரொஃபஸர். எந்த வகையிலோ அவரது உருவமே செடி கொடி, மரத்தை நினைவுபடுத்தியது. கைகளை உயரத் தூக்கி அசைத்து அசைத்துப் பேசும்போது கிளைகள் அசைவதுபோல் இருக்கும். படியவே படியாத தலைகிராப் வானை நோக்கி எழும்பும். வள்ளி திருமணம் நாடகத்தில் அவள் வேங்கை மரமாக நடித்தது ஞாபகத்திற்கு வரும். மரம் நகர வேண்டும். அவள் தடுமாறாமல் இருக்க மரத்தில் (அட்டையில்) இரு துளைகள் போடப்பட்டிருந்தன. கிட்டத்தட்ட அந்த வேங்கை மரத்தின் சாயலில்தான் புரொஃபஸர் இருந்தார்.

இதை அம்மாவிடம் சொன்னபோது அம்மா சிரித்தாள். ''நல்ல கற்பனைடீ'' என்றாள்.

''சிங்கம்போல நரஸிம்மரும் யானை போல பிள்ளையாரும் குரங்குபோல ஹனுமாரும் இல்லேயா?''

''புராணங்களுக்கெல்லாம் உள்ளர்த்தம் இருக்கு, உளறாதே.'' அந்த உள் அர்த்தம் என்னவென்று கடைசி வரை கேட்டுக் கொள்ளவில்லை.

''சரி, சாமியெல்லாம் வேண்டாம். ரோசாப்பூ போல அல்லது வெள்ளிரிப் பழம்போல ஜெயலலிதா.''

''அதையாவது ஏத்துக்கலாம்'' என்றாள் அம்மா.

அவளுக்குச் சிரிப்பு வந்தது. பகபகவென்று.

''ஏண்டி, உனக்கு இப்ப சிரிப்பு வருதா?''

அவள் வியப்புடன் கரிய வளையங்களுடே பார்த்தாள். ராதா.

''அட நீயா?'' என்றாள் அவள் சந்தோஷத்துடன். ''வா. வா. தனியா நிக்கிறேனோன்னு நினைச்சேன். திடீர்னு அபத்தமாத் தோணுது எல்லாமே. உனக்கு வரல்லே சிரிப்பு?''

''எனக்கு இன்னும் உணர்ச்சிகள் மரத்துப் போகல்லே.'' அழுவாள் போலிருந்தது.

அவள் அவசரமாகச் சொன்னாள். ''அப்ப அது ஆபத்து. கிளம்பு.''

கூச்சலும் குழப்பமும் ஆவேசமும் கருவளையங்களுமாக இருந்த இடத்தை விட்டு அவர்கள் வெளியே வந்தார்கள்.

''எங்கே?''

''எங்க வீட்டுக்குப் போகலாம். ஓ, இப்ப வேண்டாம். அம்மா பள்ளிக்கூடம் போயிருப்பாங்க. அப்பா க்ளினிக்கிலே இருப்பாங்க.''

''உங்கப்பா டாக்டரா?''

''ஆமாம்.''

''என்ன டாக்டர்?''

''மனோதத்துவம், ஹிப்னாட்டிஸம்.''

''ஹிப்னாட்டிஸமா? நீ பார்த்திருக்கியா?''

''ஊஹூம். உள்ளேயே விட்டதில்லே. இன்னிக்கு வேணா முயற்சி பண்ணி பார்க்கலாம். என்ன சொல்றே?''

''நா ரெடி'' என்றாள் ராதா. குரலில் சோர்வு குறைந்திருந்தது. ஒருவர் கையை மற்றவர் பிடித்தபடி அவர்கள் வேகமாக நடந்தபோது

நெடுஞ்சாலையில் அரசு வாகனங்களும் போலீஸ் ஜீப்களும் விரைந்தன. மற்றபடி ஆள் நடமாட்டமே இல்லாமல் கிராமங்கள் மதிய உறக்கத்தில் கிடந்தன. அங்கங்கே தேர்தல் பிரச்சார பிளாஸ்டிக் தோரணங்கள் கருப்பு சிவப்பில் பளபளத்தன, இஷ்ட தெய்வங் களுக்கு சூட்டிய மாலைகள் போல. சில அறுந்திருந்தன; யாரோ இழுத்து அறுத்தது போல. எதிரில் ஒரு வெள்ளாட்டு மந்தை தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு வந்தது. முன்னால் வந்த சில ஆடுகளின் கழுத்தில் கருப்பு சிவப்பு மாலை பள்பளத்தது. திடீரென்று ஆடுகள் 'மே' என்று சப்தமிட்டபடி திசைத் தடுமாறி ஓட ஆரம்பித்தன. பின்னால் தூங்கிவழிந்தபடி வந்த ஆடு மேய்க்கும் சிறுவன் திடுக்கிட்டு, 'ஏய் ஏய்' என்று அவற்றின் பின்னால் தலை தெறிக்க ஓடினான். அவன் கழுத்திலும் பிளாஸ்டிக் தோரணம்.

''டேய், டேய், மெள்ளப்போடா'' என்றார்கள் இருவரும். அவனுக்குக் காதில் விழுந்ததாகத் தெரியவில்லை.

''அவன்தான் நாளைய விசுவாசமான தொண்டன்'' என்றாள் ராதா.

''உன் ஜோஸ்யத்திலே எனக்கு நம்பிக்கையில்லே'' என்றாள் இவள்.

ராதா பதில் சொல்லவில்லை. விவாதத்துக்கு அவள் தயாராக இல்லை என்று தோன்றிற்று.

இவளுக்கு சிரிப்பு வந்தது. பக பகவென்று.

''சிரிக்காதேடி கங்கா. எனக்கு வயிறு எரியுது'' என்றாள் ராதா.

''சீச்சீ. உடம்புக்கு அத்தனை முக்கியத்துவம் கொடுக்கறதுதான் நம்ம பிரச்சனையே. எங்கப்பா கிட்ட பேஷண்டா வர்றவங்க பிரச்னையும் அதுதான்.''

''எனக்கு ஹிப்னாட்டிஸம்னா பயம்.''

''நீ ஒரு பயந்தாங்குளி. உனக்கு பயம்னா நா மட்டும் உள்ளே போறேன்.''

''உள்ளே விடமாட்டாங்கன்னு சொன்னியே?''

''இன்னிக்கு முயற்சி பண்ணலாம்.''

''ஓ.கே. நானும் வரேன். ஒரு மாறுதல் வேணும்.''

இருவரும் விறுவிறுவென்று நடந்தபோது மனசும் உடலும் லேசாகி விட்ட மாதிரி இருந்தது. அப்பாவின் க்ளினிக்கில் ஆள் அரவமே இல்லை. காம்பவுண்டில் ஒரு மாருதி 800 நின்றிருந்தது. டிரைவர் இருக்கையில் ஒரு ஆள் தூங்கிக் கொண்டிருந்தான். வெளித் தாழ்வாரத்தில் ஒரே ஒரு பெண் அமர்ந்திருந்தாள். முப்பத்தைந்து வயதிருக்கும். ஏதோ பறிகொடுத்தவள் போல, அல்லது கரை காணாத சோகத்தை அனுபவித்தவள் போல. கண்கள் அலங்க மலங்க விழித்தன. அவர்கள் நுழைந்த போது திடுக்கிட்ட மாதிரி அவள் உடம்பு விறைத்து கண்கள் டாக்டர். எஸ். சங்கரலிங்கம் என்ற பலகையில் ஆழ்ந்து எங்கோ பிறகு தொலைவைப் பார்த்தன. கன்ஸல்டிங் அறை திறந்தது. தூக்கத்தில் இருந்து எழுந்தவள் போல ஒரு நடுத்தர வயதுப் பெண் வெளியில் வந்தாள்.

''இன்னும் ஒரு ஸிட்டிங்குக்கு வாங்க. உங்க பிரச்னை போயிரும்'' என்றபடி அப்பா வெளியே வந்தார். வெளியே அமர்ந் திருந்த பெண்ணைப் பார்த்து ''நீங்க வாங்க'' என்று சொல்லிவிட்டு உள்ளே சென்றார். அந்தப் பெண் பீதி நிரம்பிய விழிகளைத் தாழ்த்தியபடி அறைக்குள் நுழைந்தாள். கங்காவும் ராதாவும் அறையின் ஒரு ஓரமாக நின்றார்கள். அறை அதிக வெளிச்ச மில்லாமல் இருண்டிருந்தது. அப்பா அந்தப் பெண்ணை ஒரு சாய்வு நாற்காலியில் அமரவைத்தார். ஒரு ஃபைலைப் பிரித்தபடி அப்பா அவளிடம் சொல்வது போலப் படித்தார்.

''உங்க பேர் சீதா.''

''ஆமாங்க.''

''வயது 34''

''ஆமாங்க.''

''உங்க பிரச்னை...பயம்?''

''ஆமாங்க.''

''கல்யாணமாகி 15 வருஷமாச்சு. ரெண்டு பசங்க.''

''ஆமாங்க.''

''எப்படிப்பட்ட பயம்?''

''சொல்லத் தெரில்லீங்க. சதா பயமிருக்குங்க. சித்த முன்ன கூட, வெளியிலே உட்கார்ந்திருக்கறப்ப, யாரோ துரத்திவர்ற மாதிரி இருந்துச்சுங்க.''

''எவ்வளவு நாளா இந்த பயம் இருக்குன்னு குறிப்பா சொல்ல முடியுமா?''

எப்பவுமே கொஞ்சம் பயந்த சுபாவந்தாங்க. ஆனா ஒரு வருஷமா விவரமே புரியாம பயம் வருது. புருஷன் நல்லவரு. குழந்தைங்க சமத்து. நல்லா படிக்குதுங்க. பாழாப்போன பயம்தாங்க. புருஷன் வீட்டுக்கு வர லேட்டானா பயம், குழந்தைகளைப் பத்தி பயம். ராத்திரி தூக்கமே வர்றதில்லீங்க. தூக்க மாத்திரைக்கெல்லாம் பலனே இல்லே.''

''இதப்பாருங்க சீதா'' என்றார் அப்பா ஒரு குழந்தையிடம் பேசுவது போல. ''உங்க பிரச்னைக்கு என்ன காரணங்கறதைத் தேடிப்பார்க்கணும். அடிமனத்திலே புதைஞ்சிருக்கும் அது. பல ஜென்ம நினைவுகளல்லே கூடப் புதைஞ்சிருக்கலாம். நீங்க என்னோட

ஒத்துழைச்சீங்கன்னா காரணத்தை கண்டுபிடிக்கலாம். கண்டுபிடிச்ச உடனேயே உங்க பிரச்னை சரியாயிடும்.''

''நா என்ன செய்யணும்?''

''பயப்படாதீங்க. நீங்க கொஞ்ச நேரத்திலே உங்க ஆழ் மனத்திலே பயணிப்பீங்க. மறந்து போனதெல்லாம் ஞாபகத்துக்கு வரும்.''

அவள் அருகில் குனிந்து அப்பா மெதுவாக சில வார்த்தை களைத் திரும்பத் திரும்பச் சொன்னார். சிறிது நேரத்தில் அந்தப் பெண் முழுதும் வசியப்பட்டவள் போல் தெரிந்தாள்.

அப்பா ஒரு டேப் ரெக்கார்டரை முடுக்கிவிட்டார்.

''பின்னோக்கிப் போங்க சீதா. உங்க பிரச்னைக்குக் காரணத்தைத் தேடுங்க. என்ன பார்க்கறீங்க?''

அந்தப் பெண்ணின் முகம் மாறியது, அதிர்ச்சியில் உறைந்தது போல. ''அம்மா. அம்மா அழுதுகிட்டிருக்காங்க. அப்பாவுடைய பிணம் கிடக்கு.''

''நீங்க? நீங்க இருக்கீங்களா அங்கே?''

''இருக்கேன். சின்னப் பொண்ணு. தாவணி போட்டுக்கிட்டு அழுதுகிட்டு.''

''அப்புறம், அப்புறம் என்ன பார்க்கிறீங்க?''

''பெரியப்பா சத்தம் போட்டுக்கிட்டிருக்கார். இனிமே உனக்கும் உன் பெண்ணுக்கும் இங்க இடமில்லேங்கறாரு. அம்மா சரேல்னு, அவங்க கால்லே விழறாங்க. எங்கே போவேன், பொட்டைப் பிள்ளைய வெச்சுக்கிட்டுன்னு அழறாங்க. வவுத்தைக் கழுவறது எப்படிங்கறாங்க. என்னவாச்சும் செய். வேசித்தனம் செஞ்சுங்கறாரு பெரியப்பா. பக்கத்திலே நிக்கிறவங்க கம்முனு இருக்காங்க. ''இதுவும் தயாராயிடுச்சு. ரெட்டை நாயினம் வாசி''ன்னு என்னைப் பிடிச்சு

அம்மாகிட்டத் தள்ளறாரு, எல்லாரும் சிரிக்கிறாங்க, கப்புனு மார்லே பயம் வந்து உக்காருது....''

''பார்த்தீங்கா, சீதா, இதுதான் உங்க பயத்துக்குக் காரணம். உங்களுக்குப் பதினாறு வயசிலே உங்கப்பா இறந்து போனபோது ஏற்பட்ட பயம். அதையெல்லாம் சமாளிச்சு நீங்க முன்னுக்கு வந்தாச்சு. புரிஞ்சுக்குங்க. அந்த பயத்துக்கு இப்ப ஆதாரமில்லே. இப்ப சௌகர்யமா இருக்கீங்க... நினைச்சுப்பாத்தீங்கன்னா பயம் விலகும். இப்பவே விலகியிருக்கும்.''

''விலகல்லே'' என்றார் சீதா. ''இன்னும் இருக்கு.''

''அப்ப இன்னும் பின்னோக்கிப் போங்க. இன்னும் பின்னோக்கி. உங்களாலே முடியும்....''

சற்று நேரம் அப்பா திரும்பத் திரும்பச் சொன்னார். தீடீரென்று சீதாவின் முகத்தில் வேதனைக் கோடுகள் தெரிந்தன. மிகப் பெரிய உபாதையில் இருப்பவள் போல் முனக ஆரம்பித்தாள்.

''சீதா, சீதா'' என்றார் அப்பா மெல்ல. சீதா பதில் சொல்லவில்லை.

''நீங்க யாரு? உங்க பேர் என்ன?''

''என் பேர் குமுதினி.''

''என்ன வயசு?''

''பதினாலு.''

''எங்கே இருக்கீங்க?''

''தெரியல்லே. எதோ நதிக்கரை. பெரிய நதி. சமுத்திரம் மாதிரி.''

''என்ன பார்க்கிறீங்க?''

''அங்க ஒரு மடம். நிறைய பெண்கள் என்னைப் போல. சாப்பாட்டுக்கு நாதியில்லாத கும்பல். எல்லாரும் ஒதுக்கிட்ட மாதிரி

பஜனை செஞ்சுகிட்டு, பிச்சைக் காசை எதிர்பார்த்துக்கிட்டு, ஐயோ, கேவலமான வாழ்க்கை'' (சீதா அ:ழுகிறாள்).

''அப்புறம்? வேற ஏதாவது கண்ணுலே படுதா?''

''ஆமாம் இருட்டு. மடத்திலே பஜனைக்கு போணும். நேரமா யிட்டது. நா வேகமாக நடக்கறேன். யாரோ துரத்திக்கிட்டு வர்றாங்க. நா ஓடறேன், புடவை தடுக்குது. தலையிலேந்து முக்காடு சரியிது. என் தலையிலே முடியில்லை. எங்கேடி ஓடறே முண்டேன்னு ஒரு ஆளு மேலே விழுந்து இழுக்கறான். என்னைக் கீழே தள்ளி... அவன் பாரமெல்லாம் எம்மேலே. ஐயோ, ஐயோ, யாராச்சும் காப்பாத்துங்க, காப்பாத்துங்க... யாருமே வரல்லே - யாருமே...''

சீதா கைகளால் முகத்தை மூடிக் கொண்டு விசித்து விசித்து அழ ஆரம்பித்தாள். அவள் அழட்டும் என்று நினைத்தவர் போல அப்பா பேசாமல் நின்றார். பிறகு மெல்ல, ''ரிலாக்ஸ் ரிலாக்ஸ்'' என்றார். ''இதெல்லாம் நடந்து ரொம்ப காலம் ஆச்சு. ரொம்ப காலம் ஆச்சு'' என்கிறார் திரும்ப திரும்ப. பிறகு நிதானமாகச் சொல்கிறார். ''இப்பக் காலமே மாறிடுச்சு. நா நாலு எண்ணறதுக்குள்ளே நீங்க நிகழ் காலத்துக்கு வருவீங்க. ஒண்ணு, ரெண்டு, மூணு...''

சீதாவின் முகத்தில் மாறுதல் தெரிந்தது.

''இப்பத் தெளிஞ்சிடுச்சில்லையா? பயம் போயிடுச்சு இல்லையா?'' என்றார் அப்பா சர்வ நிச்சயத்துடன்.

''முன்னைக்கு இப்பப் பரவாயில்லீங்க'' என்றாள் சீதா. ''ஆனா இன்னும் முழுக்கப் போகல்லீங்க.''

''அப்ப அடுத்த வாரம் இதே நேரத்துக்கு வாங்க. இன்னும் ஒரு ஸிட்டிங் வெச்சுக்கிடுவம்.''

மேஜை மேல் இருந்த தொலைபேசி ஒலித்தது. அங்கிருந்த நிசப்தத்தில் பலமாக ஒலித்தது. சீதாவின் உடல் ஒரு முறை குலுங் கிற்று. அப்பா தொலைபேசியை கவனிக்க விரைகையில்,

''நா வரேங்க'' என்றாள்.

அப்பா தலையசைத்தபடி தொலைபேசியை எடுத்து ''ஹலோ!'' என்றார்.

கங்கா ராதாவிடம், ''நாம இப்பப் போகணும்'' என்று கிசுகிசுத்தாள். அப்பா சுவர் பக்கம் திரும்பி நின்றிருந்தார்.

''எனக்கு விளங்கல்லே. சித்த விளக்கமா சொல்லுங்க?''

அவர்கள் வெளியேறும்போது அவருடைய குரல் உயர்ந்தது.

''என்னய்யா இது அக்கிரமம்? சரியாத்தான் சொல்றீங்களா? ஐய்யய்யோ ஐய்யய்யோ! நா வரேன். எடத்தைச் சொல்லுங்க!''

அவர்கள் வேகமாக வெளியேறினார்கள். தெருவில் மறைவாக இருந்த மர நிழலில் நின்ற போது அப்பாவின் கைனட்டிக் ஹோண்டா விரைந்தது. அது பார்வையிலிருந்து மறைந்தபிறகு அவள் அங்கேயே குத்திட்டு அமர்ந்து முழங்காலில் முகத்தைப் புதைத்துக்கொண்டு விசித்து விசித்து அழ ஆரம்பித்தாள். அதற்காகவே காத்திருந்தவள் போல ராதாவும் அவளை அணைத்துக் கொண்டு அழுதாள். இப்படி நடு ரோடில் அமர்ந்து என்றாவது அழுதிருப்போமா என்று கங்கா யோசித்துப் பார்த்தாள்.

''இப்பவே அழுதுடறது நல்லது'' என்றாள் ராதா. ''இல்லேன்னா பல ஜன்மங்களுக்கு அது நம்மைத் துரத்தும். அந்த சீதா மாதிரி.''

சற்று ஆழ்ந்த மௌனத்திற்குப் பிறகு அது ஏதோ தமாஷ் போல இருவரும் சிரித்தார்கள்.

''குமுதினிக்கு முந்தின ஜன்மம் என்னன்னு தெரியறதுக்குள்ளே எங்கப்பா நிறுத்திட்டாங்க. அடுத்த வாரம் நாம எங்க இருப்பமோ?''

''எங்க இருப்பம்?''

''தெரியல்லே. முன்னபின்னெ செத்திருந்தான்னா, சுடுகாடு எப்படின்னு தெரியும்?''

இருவரும் மறுபடி சிரித்தார்கள்.

''ஏண்டி, அதெல்லாம் உண்மையாயிருக்குமா?''

''எது?''

''பழைய ஜன்மமெல்லாம் ஞாபகத்துக்கு வருமா? இல்லே அந்த சீதா ரீல் விடறாளா?''

''தெரியல்லே. அதெல்லாம் நிஜம்னு எங்கப்பா நம்பறமாதிரி இருக்கு. அது வியாதியைக் குணப்படுத்தறதுக்கான ட்ரிக்காவும் இருக்கலாம்.''

ராதா சற்று நேரம் பேசாமல் இருந்தாள். ''பூர்வ ஜென்மத்தையெல்லாம் கக்க வெக்கலாம்னா, கொலைகாரக் குற்றவாளிகளையும் சுலபமாக சொல்ல வைக்கலாமேடி?''

''வைக்கலாம், அதுக்கெல்லாம் வேற வழியும் இருக்கு.''

''என்ன வழி?''

''எனக்குத் தெரியாது. ஆனா ஒண்ணு புரியுது. இன்னிக்கு பதில் சொல்லல்லேன்னாலும் நாளைக்கு பதில் சொல்லணும். சீதாவுடைய பெரியப்பா எங்கேயாவது சொல்லிண்டிருப்பார். சுத்தி நின்று சிரிச்சவங்க சொல்லிண்டிருப்பாங்க. குமுதினியை துரத்தினவன் சொல்லிண்டிருப்பான்.''

''நாம யாருககாக பதில் சொல்லிண்டிருக்கோம்?''

''தெரியல்லே. ஏதோ நமக்கு பாக்கியிருக்குனு நினைக்கறேன்.''

''ஈசுவரா. இன்னும் என்ன பாக்கி வேணும்?''

''திருப்பித்தர வேண்டியது.''

''எப்படி?''

''நீ ஒருத்தி! அசடாட்டம். சும்மா கேள்வி கேட்டுகிட்டு. பயணம் செய்யணும். நீள நெடுக. அப்பப்புரியும். வறியா?''

''வரேன், எனக்கு வேற யார் இருக்கா?''

''உங்க வீட்டுக்குப் போக வேண்டாமா?''

''வேண்டாம். இனிமே தேவையில்லே. கிடைக்கிற நஷ்ட ஈடு தொகையை வெச்சுக்கிட்டு நிம்மதியா இருக்கட்டும். நாம எதுக்குக் குறுக்க?''

அவள் சிரித்தாள்.

''எல்லாத்துக்கும் கணக்கு இருக்குப் பாத்தியோ? லாக்கப்பிலே உதை பட்டு கேடி செத்தா அவன் பெண்ஜாதிக்கு லாபம். ரெண்டு லட்சம் கொடுக்கறாங்க. ரெண்டு போடு போடுங்க சனியன் ஒழியட்டும்னு எல்லாக் கேடிகளுடைய மனைவிமார்களும் சொல்லப்போறாங்க.''

ராதா குலுங்கக் குலுங்க சிரித்தாள். அவள் கையைப் பிடித்துக் கொண்டாள். ''பயணத்தை எப்ப ஆரம்பிக்கிறது?''

''எப்பவோ ஆரம்பிச்சுட்டமே? கவனிக்கல்லியா? வா. ஒண்ணு ஞாபகம் வெச்சுக்கோ. ஒரு வாரத்துக்கு பேப்பர் படிக்கக்கூடாது. டி.வி. பார்க்கக்கூடாது.''

''சரி. ஆனா ஏன்?''

''நமக்குத் தெரிஞ்ச விஷயம்தானே? அவங்க அரசியல் நமக்கெதுக்கு?''

''சரி.''

''நம்ம அரசியல் வேற.''

''சரி.''

அவர்கள் பயணித்தார்கள். இடம் கிடைத்த ரயிலில் ஏறினார்கள். பார்த்திராத பிரதேசங்களில் உலவினார்கள். கேட்டிராத மொழிகளை கிரகித்துக் கொண்டார்கள். மாநிலத்துக்கு மாநிலம் ஒன்றும் வித்தியாசமாக இல்லை என்பது திருப்தியளித்தது. இளைஞர்கள், இளைஞிகள் எல்லாம் தப்பாமல் பெப்ஸி மட்டுமே குடித்தார்கள். ஜீன்ஸும் டாப்பும் அணிந்தார்கள். ஆங்கிலம் பேசினார்கள். அரசியல் குண்டர்கள் கோஷமெழுப்பினார்கள். கொடும்பாவிகளை எரித்தார்கள். பேருந்துகளை உடைத்தார்கள். அப்படிப்பட்ட ஒரு பழக்கப்பட்ட சூழலில் ஆனால் பழக்கமில்லாத குளிரில் இவர்கள் வாரணாசியை அடைந்தார்கள், கங்கைக் கரையில் ஒண்டுவதற்குப் பஞ்சமில்லாத இடம் இருந்தது. சதா சர்வ நேரமும் கங்கையைப் பார்த்துக் கொண்டிருக்கலாம் போல் இருந்தது. இருபத்தி நாலு மணிநேரமும் விநாடி தப்பாமல் லக்ஷ்மண் காட்டில் சடலங்கள் எரிந்தன. இடம் கிடைக்காதவை கரையில் காத்திருந்தன. சில கங்கையில் மிதந்தன. மிதக்கும் உடல்களை லட்சியம் செய்யாமல் சிறுவர்கள் நீரில் விளையாடினார்கள். அந்திமக்கிரியை செய்ய வந்த அப்பாவிகளின் இடுப்புப் பர்ஸில் குறியாகப் புரோகிதர்கள் அரைகுறை மந்திரங்கள் சொன்னார்கள். இளைய வாரிசுகள் மூலைக் கடையில் பெப்ஸி குடித்தார்கள்.

கங்கை நீர் உற்சாகமாகத் துள்ளியது. கண்ணுக்கெட்டிய தூரம் வரை சமுத்திரம் போல. ஆதியும் அந்தமும் சங்கமித்தது போல. அவளுக்குக் கண்களில் நீர் நிறைந்தது. ரகசியக் கதவுகள் எல்லாம் உடைத்துக் கொண்டு வெளிச்சம் பரவியது போல மனசு விம்மிற்று.

''குமுதினி சொன்ன சமுத்திரம் இதுவாத்தான் இருக்கணும்'' என்றாள் ராதா.

அவள் புன்னகைத்தாள்.

''அந்தக் கடன்காரன் என்ன ஆனானோ!''

''எவன்?''

''அவளை ரேப் செஞ்ச பாவி. செத்துப் புல் முளைச்சிருக்கும்.''

அவள் சிரித்தாள்.

''வேற ரூபம் எடுத்திருப்பான்.''

''குமுதினி எடுத்த மாதிரி.''

அவர்கள் சிரித்துக் கொண்டே பெப்ஸி கடை பக்கம் போனார்கள். பெப்ஸி கும்பலில் திடீர் என்று சலசலப்பு ஏற்பட்டது.

''வாங்கடா துளசி காட்டுக்கு, அங்க ஃபிலிம் ஷூட்டிங் நடக்குது!'' என்று ஒருத்தன் மேலிருந்து கூப்பாடு போட்டான். கும்பல் பெப்ஸி பாட்டில்களை உடனடியாகக் கீழே போட்டது. காசை வீசி எறிந்து விட்டு கிடுகிடுவென்று மேட்டில் விரைந்தது.

''நாமும் போகலாம்'' என்றாள் அவள்.

அவர்கள் சென்றடைந்த போது ஷூட்டிங் நடக்கவில்லை. நிஜக் கலவரம் நடந்து கொண்டிருந்தது. ஒரு வாரமாக உழைத்து செலவழித்துப் போட்ட செட்களை ஒரு ரௌடிக் கும்பல் துவம்சம் செய்தது. தூண்கள் விழுந்தன. கூடாரங்கள் எரிந்தன. மொட்டைத் தலை கதாநாயகி கார சாரமாக ஒரு டெலிவிஷன் குழுவுக்கு பதிலளித்துக் கொண்டிருந்தாள். வெள்ளைகாரத் தயாரிப்பாளர் தலையில் கைவைத்தபடி மூலையில் உட்கார்ந்திருந்தார். கும்பல் ஆவேசமாகக் கத்திற்று. 'இந்திய கலாச்சாரத்தைக் கேவலப்படுத்துகிறாயா? இந்து விதவைகள் விபச்சாரிகளா?'

அவள் ராதாவின் தோளை அழுத்தினாள். ''குமுதினியை ரேப் செஞ்சவன் என்ன ஆனான்னியே, அதோ அவன் தான் அது.''

''யாரு?''

''முன்னாலே நின்னு கத்தறானே, அவன். குத்தமுள்ள நெஞ்சு குறுகுறுக்குது.''

ராதா சிரித்தாள்.

''இன்னொரு விஷயம் சொல்றேன். வெளிநாட்டிலேந்து வந்திருக்காளே, ஃபிலிம் எடுக்க, குமுதினி மாதிரி போன ஜன்மத்திலே இங்கே விதவையா கஷ்டப்பட்டவ.''

ராதா பகபகவென்று சிரித்தாள்.

''நல்ல கற்பனைடீ உனக்கு!''

''ஏன் அது நிஜமா இருக்கக் கூடாதா?''

''இருக்கலாம், ஆனா அவளை உண்டு இல்லேன்னு இந்தக் கும்பல் பண்ணிடும் போலிருக்கே?''

கங்கா உதட்டைப் பிதுக்கினாள். ''பூ, இது புதுசில்லே, எங்கப்பா சீதாகிட்ட சொன்னது ஞாபகம் இருக்கா? காலம் ரொம்ப மாறிப் போச்சுன்னாரு. அவர் சொன்னது தப்பு. ஸீன்தான் மாறியிருக்கு. கதை மாறலை. குமுதினி கதை தொடருது. அகஸ்தியர் பார்த்த கங்கைக்கும் இந்த கங்கைக்கும் தொடர்ச்சி இருக்கறமாதிரி.''

''எனக்குக் கவலையாயிருக்குடி, கங்கா. இப்படி எத்தனை நாளைக்கு இருப்போம்?''

''இப்படியே இருக்கமுடியாது. நமக்கு மீடியம் தேவை. தேடணும்'' என்றாள் கங்கா தீவிரமாக. ''அப்புறம் ஒரு விஷயம். உன் ஜோஸ்யத்தை நா இப்ப நம்பறேன்.''

கங்கா கிண்டல் செய்கிறாளோ என்று ராதா அவளை நிமிர்ந்து பார்த்தாள். கங்காவின் பார்வை மிகத் தீவிரமான யோசனையில் லயித்திருந்தது.

நிறைய நாட்கள் அலைந்து திரிந்து விட்டு அவர்கள் கல்கத்தா வுக்கு வந்தார்கள். அன்றைய தினசரியைப் பார்த்துவிட்டு ''ஏய், கமலுடைய படம் ஓடுது. பார்ப்பமா?'' என்றாள் ராதா.

''ரைட்டோ!''

ஏகக் கூட்டம். எல்லா மொழிக்காரர்களும் கொண்ட கூட்டம். படத்தில் எல்லார் திருப்திக்கும் எல்லா மொழிகளும் இருந்தன. கதாநாயகி நம்பர் 1ஐ வன்முறைக் கும்பல் ரேப் செய்வதற்கு முன் கதாநாயகன் ரேப் செய்து காதலை வெளிப்படுத்தினான். கதாநாயகி நம்பர் 2வையும் துரத்தித்துரத்தி முகர்ந்து முகர்ந்து.

''சே, இதுதான் காதல்னா, எனக்கு இது வேண்டாம்'' என்றாள் ராதா. ''இதென்னடி வெறி, கொலைகார வெறி?''

''யூ மேட் எ பாயின்ட்'' என்று கங்கா சிரித்தாள். ''அவன் மகாத்மா காந்தியைக் கொல்ல வேண்டியவன்.''

அவர்கள் வெளியே வரும்போது ஒரு கும்பல் கோஷமிட்டுக் கொண்டிருந்தது. ''மகாத்மாவைக் கேவலப்படுத்தும் படத்தை ஓட விடமாட்டோம்!''

''சீன் மூணு'' என்றாள் கங்கா.

''எது முதல் சீன்?''

''நாம அதிலே இருந்தமே. மறந்து போச்சா?''

சட்டென்று ராதா மௌனமானாள். அவளுடைய மௌனத்தில் தான் புதையுண்டு போனதுபோல கங்கா பேசாமல் அவள் தோளைப் பற்றி நடந்தாள். விக்டோரியா மெமோரியல் வாசலில் நின்றபோது காலமெனும் மகா சமுத்திரத்தில் நிற்பது போன்ற பிரமை ஏற்பட்டது. ஆதியும் அந்தமும் தொட்ட கங்கையோல, முடிவற்ற காலம். வெளிக்கும் மனத்துக்கும் வித்தியாசமில்லாதது போல. தேதியில்லாத

விநாடிகள், நிமிஷங்கள் என்று வரையறைக்கு அப்பாற்பட்ட காலமாக. இடைவெளியற்ற பல ஜன்மங்களின் தொடர்பாக. சீதாவும் குமுதினியும் ஒன்று போல. அதற்கு முன்பு பத்மினியோ, பாகீரதியோ? எல்லாரையும் இணைக்கும் ஜீவரேகை. அது ஒரு இலக்கைத் தேடிப்போகும். கணக்கு தீர்க்க பல ஜன்மங்கள். பல பயணங்கள். கணக்கு தீரும்வரை. தான் நினைப்பதையெல்லாம் ராதாவும் நினைப்பாள் என்று அவளுக்குத் தெரியும். முன்பு தோன்றியிராத துல்லியம் இப்போது இருவரிடையே ஏற்பட்டுவிட்டது போல் இருந்தது. சந்தர்ப்பவசத்தால் விதி ஒன்றானது விசித்திரமாக இருந்தது.

'' இது பிரயோஜனமில்லாத அலைச்சல்னு எனக்குத் தோணுது கங்கா'' என்றாள் ராதா.

''நீ பயந்தாங்குளி மாத்திரம் இல்லே, சந்தேகப்பிராணியும் கூட.''

''நாம நினைச்சதை செய்ய முடியாம போச்சுன்னா?''

''வேற யாராவது செய்வாங்க. நீயே தான் செய்யணும்னு இருக்கா என்ன?''

''நானேதான் செய்யணும்னு ஆத்திரம் வருது. அப்பதான் இந்தக் கட்டை வேகும்.''

''என்னது?''

ராதா கூச்சத்துடன் சிரித்தாள்.

''பாட்டி மாதிரி பேசறேனா?''

''அபத்தமா பேசறே.'' சிரித்தபடி கங்கா அவள் தோளை அணைத்தாள். 'உன்னுது என்னுதுன்னு இப்ப வித்யாசமில்லே முட்டாளே. அந்தக் குமுதினியும், சீதாவும், படம் எடுக்கறவளும், நானும், நீயும்....''

உலகத்து எல்லா மொட்டைத் தலைகளும் ஒண்ணுதான், புரியுது. கதை மாறாதுங்கறே?''

''அதான் சொன்னேனே, ஸீன் மாறும். கதை தொடரும்.''

''அவள் ஒரு தொடர்கதை மாதிரி!''

''எக்ஸாக்ட்லி!''

இருவரும் பெரிதாக சிரித்தார்கள்.

''பெரிய வெளிச்சத்துக்கு வந்த மாதிரி இருக்கு கங்கா எனக்கு.''

''குட்! ஆனா நாம இப்படியே தொடர முடியாது. எங்கேயாவது போயாகணும்.''

''எங்கே விதிச்சிருக்கோ!''

''மறுபடி நாம சந்திப்பமோ இல்லையோ?''

''தெரியாம சந்திப்போம் - வேற வேற வேஷத்திலே. அடையாளம் தெரியாம.''

''அதுதான் நல்லது. இல்லே கங்கா? இல்லேன்னா அது சுமைன்னா?''

''எது சுமை?''

''ஞாபகங்கள்.''

இன்னும் பல பிரதேசங்கள் சுத்திய பின் கங்கா சொன்னாள்.

''நாம பிரிய வேண்டிய நேரம் வந்துடுச்சுன்னு நினைக்கறேன் ராதா.''

''அப்பப் பிரிய வேண்டியதுதான்.''

*இருவரும் சற்று நேரம் ஒருவரையொருவர் தழுவி நின்றார்கள். பிறகு அவரவர் திசையை நோக்கிக் கிளம்பினார்கள்....*

* * * * *

*டாக்டர் சங்கரலிங்கத்துக்கு சோர்வாக இருந்தது. கிளம்பலாம் என்று நினைத்துக் கிளம்ப யத்தனிக்கையில் ஒரு புதிய பேஷன்ட் வந்திருப்பதாகப் பையன் சொன்னான்.*

*''சரி வரச் சொல்லு'' என்றார் அவர் ஆயாசத்துடன். அந்தப் பெண்ணுக்கு இருபது வயதிருக்கலாம் என்று தோன்றிற்று. பெயர் அமுதா என்றாள். அவளுடைய கண்கள் அவரைக் குழப்பிற்று. ''உள்ளே வாம்மா'' என்றார்.*

*''இதுக்கு முந்தி நீ வந்திருக்கியா இங்க?''*

*''இல்லே. எங்க அம்மா வந்திருக்காங்க, ரொம்ப வருஷத்துக்கு முந்தி.''*

*''யாரு?''*

*''சீதா.''*

*''ஓ!'' சங்கரலிங்கத்துக்கு யார் என்று புரியவில்லை.*

*''அவங்கதான் இங்க அனுப்பினாங்க.''*

*''நல்லதும்மா. உனக்கு என்ன ப்ராப்ளம்?''*

*''எனக்கும் எங்கம்மாவுக்கு முன்ன இருந்த மாதிரி சதா பயம்.''*

*''என்ன பயம்?''*

*''நெருப்பைக் கண்டா பயம். அசாதாரணமான பயம் அது. யாராவது பக்கத்திலே சிகரெட் பிடிச்சாலும்.''*

*''சின்ன வயசிலே ஏதாவது விபத்திலே மாட்டிக்கிட்டியா?''*

''இல்லேங்கறாங்க அம்மா. காலேஜில சேர்ந்தத்திலேந்து பயம்.''

டாக்டர் எல்லாவற்றையும் குறித்துக்கொண்டு அவள் ஹிப்னாட்டிஸத்துக்கு உடன் படக்கூடியவளா என்று பரிசோதித்து உறுதி செய்துகொண்டு சோதனையை ஆரம்பித்தார். டேப் ரெக்கார்டரை முடுக்கிவிட்டார்.

''அமுதா, ஆழ்மனத்துக்குப் போ. பின்னோக்கிப் பின்னோக்கி... உன் பிரச்னையோட காரணத்தைத் தேடு. ரொம்ப தூரம் போ... என்ன பார்க்கற... அமுதா....

அமுதா பதில் பேசவில்லை. முகத்தில் அதிர்ச்சி, வேதனை, கோபம், எல்லாம் கலவையாக தெரிகிறது. முகமே மாறியது.

யாரும்மா நீ?

''என் பெயர் கங்கா.''

''கங்காவா? என்ன வயசு?''

''இருபது.''

''என்ன பார்க்கறே?''

''நானும் என் சினேகிதியும்''

''சினேகிதி பேரென்ன?''

''ராதா.''

''ராதாவா? கடவுளே, என்ன செய்யறீங்க?''

''காலேஜிலேந்து திரும்பிகிட்டிருக்கோம். வழியெல்லாம் வயக்காடு. ஆள் அரவமேயில்லை. ராதா பயந்தாங்குளி. நா சிரிச்சுக்கிட்டே வரேன். திடீர்னு நாலு பேர் மோட்டார் சைக்கிள்லே வர்றாங்க. ரவுடிங்க மாதிரி இருக்கு. எங்களை இடிக்கிற மாதிரி வண்டியை நிறுத்தறாங்க. எங்க கிட்ட வம்பு பண்றாங்க. போக்கிரிகளா போயிடுங்கன்னு நா திட்டறேன். ஒருத்தன் அசிங்கமா பேசறான். நா மறுபடி திட்டறேன். ராதா பயந்துகிட்டு ஒண்டிக்கிறா. தடியங்களுக்கு கோபம் வருது. எங்க ரெண்டு பேர் மேலயும் பாயறாங்க. புடவையெல்லாம் அவுத்து... நா அவங்களை அடிக்கறேன், கடிக்கறேன், ஆனா தாக்குப் பிடிக்க முடியல்ல. நாலு தடியங்க. கிங்கரன்கள் மாதிரி.''

கங்கா பேச முடியாமல் விசிக்கிறாள். விசித்தபடியே தொடர்கிறாள். ''நாங்க அலறறோம் - யாரும் வரல்லே உதவிக்கு.''

டாக்டர் கண்களில் நீருடன் பேசத் தெரியாமல் நிற்கிறார்.

''ஐயோ, ஐயோ விடுங்க, பாவிங்களா, விடுங்க போலீஸ்லே பிடிச்சுக் கொடுப்பம், ராஸ்கல்ஸ்''

அமுதா அலற ஆரம்பித்தாள். நிற்காமல் விடாமல் அலறல். அறைச் சுவர்களைத் தாண்டி காம்பவுண்டு சுவரைத் தாண்டித் தெருவுக்குச் சென்றது. அவளுடன் தானும் அலறுவது போல் இருந்தது சங்கரலிங்கத்துக்கு. வெகுநேரம் கழித்து மெல்லக் கேட்டார்.

''என்ன ஆச்சு. கங்கா, அப்புறம் என்ன ஆச்சு... குழந்தே?''

''நெருப்பு நெருப்பு, ஐயோ பெட்ரோல் ஊத்தி நெருப்பு வைக்கறாங்க. மூச்சு முட்டுது மூச்சு. அப்பா, அம்மா! மூச்சு முட்டுது....''

''எரிச்சல் தாங்க முடியல்லே. மூச்சுமுட்டுது...''

அமுதாவுக்கு மூச்சிறைத்தது.

அமுதாவா, கங்காவா?

சங்கரலிங்கம் திக்பிரமையுடன் நின்றார்.

ரிலாக்ஸ், ரிலாக்ஸ் என்று சொல்ல முடியவில்லை. இதெல்லாம் நடந்து ரொம்ப காலம் ஆச்சு. பயப்படாதே என்று சொல்ல முடியவில்லை. நாலு எண்ணறதுக்குள்ளே நிகழ் காலத்துக்கு வந்துடுவே ஒண்ணு ரெண்டு, மூணு என்று சொல்ல முடியவில்லை.

எதுவுமே செய்யமுடியவில்லை.

அமுதாவுக்கு மூச்சுத் திணறிக் கொண்டிருந்தது.

அமுதாவா, கங்காவா, ராதாவா?

இந்தியா டுடே இலக்கியமலர் 2000

